விராலிமலை சப்-ரெஜிஸ்ட்ரார் எல்லையோடு சேர்த்தால் அங்குள்ள மக்களுக்கு மிகவும் அனுகூலமாக இருக்கும். இதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா என்பதை கேட்கவிரும்புகிறேன்.

THE HON. SRI V. RAMAIAH : இதுவரைக்கும் எந்தவிதமான தகவலும் கோரிக்கையும் இதுபற்றி அரசாங்கத்திற்கு வரவில்லை. கனம் அங்கத்தினர் அவர்கள் ஏதாவது கோரிக்கையை தெரிவிப்பார்களானால் அதைப் பரிசீலனை செய்யலாம்.

### *Fresh-water fish*

* 86 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the varieties of edibile fresh-water fish that are available in the State; and

(*b*) whether any new variety has been introduced and if so the results thereof?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) & (*b*) A statement [a] is placed on the table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR : ஸார், இதில் பல ரக மீன்களைப் பற்றி சொல்லப்பட்டிருக்கின்றது. நம் நாட்டு இனங்களான விரால், ஜைரை போன்ற இனங்களையும் வளர்ப்பதற்கு அரசாங்கத்தினிடத்தில் ஏதாவது திட்டம் இருக்கின்றதா ? இதற்கு மீன் குஞ்சுகள் கொடுத்து வளர்ப்பதற்கும் ஏதாவது திட்டம் இருக்கின்றதா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : நாட்டு இனங்களை சேர்ந்த மீன்களும் அதிகமாக பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அதோடு மீன் குஞ்சுகளை கொடுத்து வளர்ப்பதற்கு மீன் இலாகா கவனம் செலுத்துகின்றது. மீன் இலாகா அதிகாரிகளே இதற்கு தகுந்த ஏற்பாடுகளை செய்து தருவார்கள்.

SRI A. A. RASHEED : Sir, may I know the revenue realized from the sale of fish from ponds and tanks for the last two years?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The hon. Member who put the original question had only asked for information about the varieties of edible fresh-water fish and not about the revenue. So, I am unable to give information about revenue just now.

SRI P. S. SANTHANAM : தலைவர் அவர்களே, ஏரிகளில் மீன் மகசூல் இருக்கும்போது அது தனிப்பட்ட சொந்தக்காரர்களுக்கு ஏரி மீன்கள் சேருகின்ற காரணத்தினால், சர்க்கார் மீன் விதைகளைக் கொடுத்தால், இதனால் சர்க்காருக்கு ஏதேனும் அனுகூலம் ஏற்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : மீன் குஞ்சுகளைப் பெருக்க தகுந்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. தனிப்பட்டவர்கள் மீன் குஞ்சுகளைப் பெருக்க வேண்டுமென்றால் அவர்களுக்கும் வேண்டிய உதவி கொடுக்கப்பட்டு வருகிறது. கூடுதலான ஏரிகளையும், குளங்களையும் அரசாங்கமே எடுத்து மீன் அபிவிருத்தியைச் செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன.

SRI K. SATTANATHA KARAYALAR : மீன் பாசிக் குத்தகை பஞ்சாயத்துக்களிடம் எங்கெல்லாம் இருக்கின்றதோ, அதற்கெல்லாம் முதலிடம் கொடுத்து மீன் வளர்ப்பதற்கு மீன் இலாகா ஏற்பாடு செய்யுமா ?

---

[a] Printed as Appendix on pages 339–340 infra.

[7th February 1959

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : மீன் வளர்ச்சியை, மீன்வளத்தை பெருக்க என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமோ அந்தந்த நடவடிக்கைகளெல்லாம் எடுக்கப்பட்டு வருகிறது. அது மட்டுமல்ல. இப்போது மீனை அதிகப்படுத்துவதில் சர்க்கார் முயற்சி எடுப்பதிலும், இருக்கும் மீன் குஞ்சுகளை வைத்துக்கொண்டு தான் பெருக்க முடியுமே தவிர, எல்லாக் குளங்களிலும், குட்டைகளிலும் வளர்ப்பது என்பது சாத்தியமானதல்ல.

SRI K. B. S. MANI : தலைவர் அவர்களே, இப்போது கொடுக்கப்பட்டுள்ள அறிக்கையிலே பல வகை மீன்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளுள் எந்த மீன் மிகவும் ருசியானது? அது சென்னை மார்க்கெட்டிலே கிடைக்குமா? (சிரிப்பு.)

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கனம் அங்கத்தினர் அவர்கள் சாப்பிட்டுப் பார்த்தால் தெரியும் (சிரிப்பு.)

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : மீன் உணவுவகைகளில் மிகச் சிறந்த உணவாக இருப்பதால், கிராமங்களில் சொந்த கிணறுகளில் இதை விஸ்தரிக்க ஏது இருப்பதால் சொந்தக் கிணறுகளில் விஸ்தரிக்க நடவடிக்கை எடுப்பார்களா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : தனிப்பட்டவர்கள் அபிவிருத்தி செய்ய முன் வந்தால் இப்போதும் உதவி கொடுக்கப்பட்டு வருகின்றது.

SRI A. VEDARATHNAM : இப்போது கொடுக்கப்பட்டுள்ள ஜாபிதாவில் "பால் மீன்" என்ற ஒரு வகை குறிப்பிடப்பட்டிருக்குகிறது. அந்தப் பெயருக்கும் பாலுக்கும் ஏதாவது சம்பந்தமுண்டா? (சிரிப்பு.)

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : பெயரைப் பொருத்து எல்லாம் இருக்க முடியாது. பெயர்கள் பலவிதப்படும். மீன்கள் பல விதப்படும். ஆகையால் பாலுக்கும் இந்த மீனுக்கும் பொருத்தம் இருக்கிறது என்று நினைப்பது சரியல்ல. அது ஒரு வகை மீன், அவ்வளவுதான்.

*Grama Sevak Training Centre, Kovilpatti*

* 87 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Government have received any representation from the Gramasevak trainees of the Training Centre at Kovilpatti;

(*b*) if so, what their request is; and

(*c*) what action has been taken on it?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) Some of the Gramasevak trainees at the Rural Extension Training Centre, Kovilpatti, requested that the orders extending the period of training from 18 months to two years should not be enforced on them and that they should be allowed to complete the training in 18 months. Some of the trainees recruited direct through the Madras Public Service Commission had also made a request that they should be granted the pay and allowances admissible to Gramasevaks, Grade II, as allowed in the case of candidates recruited as political sufferers.

(*c*) The requests were negatived by the Government.